OL/2016/12-T-I,II(NEW)



நவ නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

12 T I,II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2016 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2016 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2016

| | |
|---|---|
| ශෛවනෙරි I, II | පැය තුනයි |
| சைவநெறி I, II | மூன்று மணித்தியாலம் |
| Saivaneri I, II | Three hours |

## சைவநெறி I

**கவனிக்க :**

(i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, பின்பற்றுக.

1. சைவநெறியில் ஓங்காரப் பொருளாக விளங்கும் கடவுள்
(1) விநாயகர்   (2) சூரியன்
(3) சிவன்   (4) முருகன்

2. திருமணத்தில் 'பாணிக் கிரகணம்' என்பது
(1) அம்மி மிதித்தல்   (2) மோதிரம் எடுத்தல்
(3) கைப்பிடித்தல்   (4) அருந்ததி காட்டல்

3. 'வேதமோ டாகமம் மெய்யாம் இறைவனூல்...' எனக் குறிப்பிடுவது
(1) திருவிசைப்பா   (2) திருப்பல்லாண்டு
(3) திருப்புகழ்   (4) திருமந்திரம்

4. ஒருவர் இறந்த பின்னர் செய்யப்படும் கிரியை
(1) அபரக் கிரியை எனப்படும்.   (2) பூர்வக் கிரியை எனப்படும்.
(3) நித்தியக் கிரியை எனப்படும்.   (4) நைமித்தியக் கிரியை எனப்படும்.

5. பஞ்சகிருத்தியங்களுள் அழித்தல் தொழிலைக் குறிப்பது
(1) கொடியேற்றம்   (2) தேர்த் திருவிழா
(3) வாகனத் திருவிழா   (4) தீர்த்தம்

6. திரிகரணங்களுக்கும் எட்டாத நிலையிலுள்ள இறைவனுக்குரிய பெயர்
(1) பரம்பொருள்   (2) சிவன்
(3) உருத்திரன்   (4) பரமசிவன்

7. கண்ணகி அம்மனைக் குளிர்விக்கும் முகமாகப் பாடப்படும் பாடல்
(1) கண்ணகி அம்மன் பள்ளுப் பாடல்   (2) சிலம்பு கூறல்
(3) திருக்குளிர்த்தி அம்மானைப் பாடல்   (4) கண்ணகி அம்மன் வழிநடைச் சிந்து

8. வரலட்சுமி விரதம் அனுஷ்டிக்கப்படும் தினம்
(1) ஆவணி மாதப் பூரணைக்கு முந்திய வெள்ளிக்கிழமை
(2) மார்கழி மாதத் திருவாதிரை நட்சத்திரம்
(3) கார்த்திகை மாதத் தேய்பிறைச் சனிக்கிழமைப் பிரதமை
(4) ஐப்பசி மாத வளர்பிறைப் பிரதமை

[பக். 2 ஐப் பார்க்க

9. எமது ஆன்மிக வாழ்வு மேம்படப் பெரிதும் உதவுவன
(1) விரதங்கள் (2) நித்தியக் கிரியைகள்
(3) கூட்டுப் பிரார்த்தனைகள் (4) விழாக்கள்

10. வாழ்க்கையில் இன்பம் பெறுதல், துன்பத்தைப் பகிர்தல், ஒருவருக்கொருவர் உதவும் உறவுகளை வலுப்படுத்தல் ஆகியவற்றுக்கு உதவுவது
(1) உபநயனச் சடங்கு (2) மரணச் சடங்கு
(3) பூப்புனித நீராட்டுச் சடங்கு (4) திருமணச் சடங்கு

11. தீபாவளிப் பண்டிகையில் **தவிர்க்க** வேண்டியது
(1) புதிய பொருள்களை வாங்குதல் (2) எண்ணெய் தேய்த்து நீராடுதல்
(3) கள்ளுண்ணல் (4) வீட்டில் மாவிளக்கேற்றல்

12. பொன்னாலை வரதராஜப் பெருமாள் ஆலயத்தின் தீர்த்தம் நடைபெறும் இடம்
(1) கீரிமலை (2) திருவடிநிலை
(3) காரைநகர் (4) மூளாய்

13. சகல சௌபாக்கியங்களும் பெறும்பொருட்டு ஓதவேண்டிய பாடல்
(1) "பித்தா பிறை சூடிப் பெருமானே..." (2) "காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி..."
(3) "நாமார்க்குங் குடியல்லோம்..." (4) "தனந்தருங் கல்வி தரும்..."

14. சைவ சமய வாழ்வில் நாம் தினமும் கட்டாயம் தரிக்க வேண்டியது
(1) மஞ்சள் (2) விபூதி
(3) சந்தனம் (4) குங்குமம்

15. 'ஓமப் புகை எம்மீது படுவதால் உடலில் உண்டாகும் நோய்கள் நீங்கும்' என்னும் நம்பிக்கையுடன் நடாத்தப்படும் ஆலயக் கிரியை
(1) காமியக் கிரியை ஆகும். (2) நித்தியக் கிரியை ஆகும்.
(3) கும்பாபிஷேகக் கிரியை ஆகும். (4) ஆன்மார்த்தக் கிரியை ஆகும்.

16. சிவாகமங்களின் எண்ணிக்கை யாது ?
(1) பதினான்கு (2) பதினெட்டு
(3) இருபத்தேழு (4) இருபத்தெட்டு

17. பன்னிரண்டாவது சைவத் திருமுறையாக அமைந்திருப்பது
(1) திருவிசைப்பா (2) திருப்பல்லாண்டு
(3) திருமந்திரம் (4) பெரியபுராணம்

18. 'புவனேஸ்வரிபீடம்' எனப் போற்றப்படும் அம்மன் ஆலயம்
(1) மட்டக்களப்பு ஸ்ரீ பத்திரகாளி அம்மன் ஆலயம் (2) நயினை நாகபூசணி அம்மன் ஆலயம்
(3) வற்றாப்பளை கண்ணகி அம்மன் ஆலயம் (4) திருகோணமலை துர்க்கை அம்மன் ஆலயம்

19. 'யோகத்திற் சரியை' என்பதற்குள் அடங்குவனவற்றைக் கொண்ட தொகுதி
(1) இயமம், நியமம், ஆசனம் (2) பிரத்தியாகாரம், பிராணாயாமம், தியானம்
(3) கேட்டல், சிந்தித்தல், தெளிதல் (4) கேட்டல், தாரணை, சமாதி

20. சரியைநெறி நிற்போர் பெறும் முத்தி
(1) சாரூபம் (2) சாமீபம்
(3) சாலோகம் (4) சாயுச்சியம்

21. சுந்தரர் வலக்கண் பார்வை பெற்ற தலம்
(1) திருவெண்பாக்கம் (2) திருவாரூர்
(3) திருவொற்றியூர் (4) திருக்கச்சியேகம்பம்

22. 'விழுமியம்' என்பது எதனைக் குறிக்கும் ?
(1) ஒழுக்கமுடைமையையும் அன்புடைமையையும்
(2) கடமை, வாய்மை, தூய்மை ஆகிய மூன்றையும்
(3) ஒழுக்க வாழ்வின் மூலம் பின்பற்றப்படுகின்ற அனைத்து நடத்தைகளையும்
(4) ஒழுக்கமுடைமையையும் செய்ந்நன்றி மறவாமையையும்

[பக். 3 ஐப் பார்க்க

23. சைவப் பெருநெறியிலே சமய நோக்கும் சமூக நோக்கும் ஒருசேர உண்டு என்பதனை உணர்த்தும் கூற்று
(1) "அறம் செய்ய விரும்பு." (2) "மெய்ப்பொருள் காண்பது அறிவு."
(3) "தீதும் நன்றும் பிறர்தர வாரா." (4) "மக்கள் சேவையே மகேசன் சேவை."

24. மட்டக்களப்புப் பிரதேசத்தில் திரௌபதி அம்மன் ஆலயங்கள் அமைந்துள்ள இடங்களின் தொகுதி
(1) பாண்டிருப்பு, பழுகாமம், ஆரையம்பதி (2) புதூர், புளியந்தீவு, கல்முனை
(3) புளியந்தீவு, பாண்டிருப்பு, களுதாவளை (4) ஆரையம்பதி, பழுகாமம், காரைதீவு

25. பதினெண் சித்தர்களின் பெயர்கள் மாத்திரம் அடங்கிய தொகுதி
(1) பட்டினத்தார், பத்திரகிரியார், செல்லப்பா சுவாமிகள்
(2) அகப்பேய்ச்சித்தர், குதம்பைச்சித்தர், நவநாதச்சித்தர்
(3) பாம்பாட்டிச்சித்தர், கொங்கணச்சித்தர், சித்தானைக்குட்டிச்சித்தர்
(4) திருமூலர், அகத்தியர், சிவவாக்கியர்

26. வேதங்களின் மறுபெயர்கள் அடங்கிய தொகுதி
(1) சுயம்பு, எழுதாமறை, சங்கிதைகள் (2) எழுதாக்கிழவி, எழுதாமறை, சுருதி
(3) எழுதாக்கிழவி, சுருதி, ஆரணியங்கள் (4) சுருதி, சுயம்பு, பிராமணங்கள்

27. இறைவன் குடியிருக்கும் இடம் மட்டுமன்றி எமது பண்பாடுகள் வளர்க்கப்படுகின்ற இடமாகவும் கருதப்படுவது
(1) குடிமனைகள் (2) ஆச்சிரமங்கள்
(3) பாடசாலைகள் (4) கோயில்கள்

28. 'தடுத்தாட்கொண்ட புராணம்' என்னும் பகுதி அடங்கியுள்ள நூல்
(1) கந்தபுராணம் (2) பெரிய புராணம்
(3) கோயிற் புராணம் (4) சேக்கிழார் புராணம்

29. மனிதர் தெய்வமாவதற்கு மிகவும் வேண்டியதாகக் கூறப்படுவன
(1) கல்வியும் அறிவும் (2) ஈகையும் இரக்கமும்
(3) நேர்மையும் கடமையுணர்வும் (4) புகழும் பெருமையும்

30. "பட்டகட்டையில் பகல்குருடு போகிறது" என்று கூறியவர்
(1) மறைஞான சம்பந்தர் (2) குருஞான சம்பந்தர்
(3) திருஞான சம்பந்தர் (4) அருணந்தி சிவாச்சாரியார்

31. மலையக இராச்சியம் நிலவிய காலத்தில் முருக வழிபாட்டிற்காக அமைக்கப்பட்ட வழிபாட்டுத்தலம் எது ?
(1) கடலாதெனிய விகாரை (2) எம்பக்க தேவாலயம்
(3) இலங்காதிலக விகாரை (4) நாத தேவாலயம்

32. கொக்கட்டிச்சோலை தான்தோன்றீச்சரக் கோயில் பூசகரை எவ்வாறு அழைப்பர் ?
(1) சங்கமர் (2) வண்ணக்கர்
(3) வீரசைவர் (4) சிவாச்சாரியார்

33. பாவ புண்ணியங்களை எழுதி வைத்து, பாவங்களுக்கான தண்டனை வழங்குமாறு யமதர்மனுக்கு ஆணையிடுபவர்
(1) வைரவர் (2) சண்டேஸ்வரர்
(3) ஐயப்பன் (4) சித்திரபுத்திரனார்

34. பாலாவியைத் தீர்த்தமாகக் கொண்டு அமைந்துள்ள சிவாலயம்
(1) நகுலேச்சரம் (2) தான்தோன்றீச்சரம்
(3) திருக்கேதீச்சரம் (4) திருக்கோணேச்சரம்

35. "குனித்த புருவமுங் கொவ்வைச் செவ் வாயிற் குமிண்சிரிப்பும்..." எனும் தேவாரத்திற் குறிப்பிடப்படும் சிவவடிவம்
(1) நடராஜ வடிவம் (2) சோமாஸ்கந்த வடிவம்
(3) கங்காதர(ர்) வடிவம் (4) தட்சணாமூர்த்தி வடிவம்

36. "நீறில்லா நெற்றி பாழ்..." என்று பாடியவர்
(1) நக்கீரர் (2) ஔவையார்
(3) பாரதியார் (4) சேந்தனார்

[பக். 4 ஐப் பார்க்க

37. "இராவணன் மேலது நீறு..." என்ற வரி பின்வருவனவற்றுள் எதில் இடம்பெறுகிறது ?
(1) தேவாரத்தில் ஆகும். (2) திருமுருகாற்றுப்படையில் ஆகும்.
(3) கந்தபுராணத்தில் ஆகும். (4) திருப்புகழில் ஆகும்.

- பின்வரும் அட்டவணையில் **A** இலிருந்து **I** வரையில் தரப்பட்டுள்ள தகவல்களை அடிப்படையாகக் கொண்டு **38** தொடக்கம் **40** வரையான வினாக்களுக்கான விடைகளைத் தெரிவுசெய்க.

| புறந்சந்தான குரவர் | வாழ்வியற் சம்பவம் | நூல் |
|---|---|---|
| A - அருணந்தி சிவாச்சாரியார் | D - ஞான மார்க்கத்தில் சிறிதுகாலம் மௌனம் காத்து வாழ்ந்தவர் | G - திருவருட்பயன் |
| B - மறைஞான சம்பந்தர் | E - குருவின் முழங்கை வழியாக ஒழுகிய கூழைப் பிரசாதமாக அருந்தியவர் | H - சிவஞானசித்தியார் |
| C - உமாபதி சிவாச்சாரியார் | F - அனைத்து ஆகம நூற் கல்வியில் வித்துவம் பெற்றவர் | I - சதமணித்திரட்டு |

38. 'பதிமுதுநிலை' என்னும் முதலதிகாரத்தைக் கொண்ட நூலோடு தொடர்புடைய தொகுதி
(1) AFH (2) BDI (3) CEG (4) CEH

39. "ஆணவத்தின் சொருபம் யாது ?" என்று வினா எழுப்பியவருடன் தொடர்புடைய தொகுதி
(1) ADG (2) AFH (3) BFH (4) CDI

40. ஆவணிமாத உத்தர நட்சத்திரத்தில் முத்தியடைந்தவருடன் தொடர்புடைய தொகுதி
(1) AEH (2) AEG (3) BDI (4) CFH

* *

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

12 T I,II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2016 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2016 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2016

ශෛවනෙරි I, II
சைவநெறி I, II
Saivaneri I, II

## சைவநெறி II

* **முதலாம்** வினாவும் **இரண்டாம்** வினாவும் உட்பட **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.
* முதலாம் வினாவின் விடைக்கு **20** புள்ளிகளும் இரண்டாம் வினா உட்பட ஏனைய ஒவ்வொரு வினாவின் விடைக்கும் **10** புள்ளிகள் வீதமும் வழங்கப்படும்.

**1.** மேல்வரும் வினாக்களுக்குச் சுருக்கமான விடை எழுதுக.

(i) வேதம் என்ற சொல்லின் பொருள் யாது ?

(ii) சைவ சமயிகள் உணவு உண்பதற்கு முன்னர் பாடவேண்டிய பதிகம் யாது ?

(iii) "கடமையைச் செய் பலனை எதிர்பாராதே" எனக் கூறும் புனித நூல் எது ?

(iv) 'கன்னிகாதானம்' என்றால் என்ன ?

(v) சுந்தரமூர்த்தி நாயனாரின் குருபூசைத் தினம் யாது ?

(vi) "சத்தசத்தைச் சாரா தசத்தறியா தங்கணிவை
உய்த்தல்சத சத்தா முயிர்"
இதில் வரும் 'சதசத்து' என்பது எதனைக் குறித்து நிற்கின்றது ?

(vii) வீட்டில் தினசரி இடம்பெறும் சமயச் செயற்பாடுகள் **இரண்டினை** எழுதுக.

(viii) அஷ்டபந்தனத்துள் அடங்கும் பொருட்கள் **இரண்டினைத்** தருக.

(ix) அருணகிரிநாதர் முருகன் மீது பாடிய பக்தி இலக்கியங்கள் **இரண்டினைப்** பெயரிடுக.

(x) சைவசமயி ஒருவருக்கு இருக்க வேண்டிய உயர்ந்த பண்புகள் **மூன்று** தருக.

**2.** (i) மேல்வரும் பாடல்களுள் **இரண்டினை** அடிமுறை பிழையாது திருத்தமாக எழுதுக.

(ii) அவற்றின் பொழிப்புரையை எழுதுக.

(அ) "அங்கமும் வேதமும் ஓதுநாவர்..."
(ஆ) "தந்ததுன் தன்னைக் கொண்டதென்..."
(இ) "உம்பர்தரு தேனுமணிக் கசிவாகி..."
(ஈ) "தனந்தருங் கல்வி தரும்...'
(உ) "தண்ணளிவெண் குடைவேந்தன் செயல்கண்டு..."

**3.** "ஈழத்துச் சைவசமய வரலாற்றில் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் தனிச் சிறப்புடையவராவார்."

(i) ஆறுமுகநாவலர் நல்லூரில் நிறுவிய அச்சியந்திரசாலையின் பெயர் என்ன ?

(ii) ஆறுமுகநாவலர் எழுதி வெளியிட்ட நூல்கள் **மூன்றினைக்** குறிப்பிடுக.

(iii) ஆறுமுகநாவலரின் சைவ சமயப் பணிகள் **மூன்றினைச்** சுருக்கமாக விளக்குக.

[பக். 6 ஐப் பார்க்க

**4.** "ஆன்மிக விடுதலைக்கான மார்க்கங்களுள் சைவநாற் பாதங்கள் முதன்மையானவை."

(i) தாயுமானவர் சைவநாற்பாதங்களை எவற்றிற்கு ஒப்பிடுகின்றார் ?

(ii) 'கிரியையிற் சரியை' என்பதன் பொருள் விளக்கம் யாது ?

(iii) கிரியைநெறி பற்றி விபரிக்குக.

**5.** "என்கடன் பணி செய்து கிடப்பதே..." - அப்பர் தேவாரம்

(i) திருநாவுக்கரசர் அருளிய தேவாரத்தில் எத்தனை பதிகங்கள் உள்ளன ? அவை எத்தனை திருமுறைகளாக வகுக்கப்பட்டுள்ளன ?

(ii) சிவபெருமானால் திருநாவுக்கரசருக்குப் பொறிக்கப்பட்ட **இரு** இலச்சினைகளும் எவை ? அச்சந்தர்ப்பத்தில் பாடப்பட்ட திருப்பதிகம் எது ?

(iii) திருநாவுக்கரசரின் அற்புதங்கள் **ஐந்தினைச்** சுருக்கமாக விளக்குக.

**6.** "கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்
ஓடுஞ் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்
கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்" - பெரியபுராணம்

(i) பெரியபுராணத்தை அருளியவர் யார் ? அது எத்தனையாம் திருமுறையாக இடம்பெற்றுள்ளது ?

(ii) சிவனடியார்களின் சிறப்புகள் இப்பாடலில் எவ்வாறு கூறப்பட்டுள்ளன ?

(iii) பெரியபுராணம் பற்றிச் சுருக்கமாக விளக்குக.

**7.** மேல்வருவனவற்றுள் எவையேனும் **இரண்டிற்குச்** சிறுகுறிப்பு எழுதுக.

(i) பஞ்சாங்கம்

(ii) சுவாமி விபுலானந்தர்

(iii) விநாயகசஷ்டி விரதம்

(iv) சைவ ஆலயங்களின் சமுதாயப் பணிகள்

* * *